ளுலும் மித்தையாம். இங்கு முதலியவென்னுஞ் சொல்லிற்கு மூர்ச்சை முதலியன பொருளாம். [சிதாபாசனுக்கு மித்தியாத் தன்மையிருக்குக, அதனாலும் என்ன பயன் எனக் கூறுகின்றார்] எப்போது கூடஸ்தனினின்றும் விவேசனஞ் செய்யப் பட்ட சிதாபாசன் மாயிகன் என்று அறிந்தானோ அப்போது தனது சுபாவமாகிய சொரூபத்தினை இப்படி மித்தியா வடிவமாக அடிக்கடி விவேசனஞ் செய்கின்றான். அதாவது நிஜ வடிவ கூடஸ்தனினின்றும் வேறுபடுத்தி அறிகின்றான்.

[அக்கூடஸ்தனினின்றும் தன்னை விவேகித்தலினாலும் என்ன பயனுண்டாகின்றதெனக்கூறுகின்றார்.]

சுலோகம் 219.

விவிச்ய நாசம் நிச்சித்ய புநர்போகம் ந வாஞ்சதி |
முமூர்ஷு: சாயிதோ பூமௌ விவாஹம் கோऽபிவாஞ்ச்சதி ||

(இதற்குத் தமிழ்க்கவி—எவமறக் கூறதுசெய் தழிவினைத் தேறியபின் எவளவும் போகம் நயவான், புவனியின் மூர்ச்சையது புகிகிடப் பானொருநற் புதுமணம் நயப்பன் எவனோ.)

(இ-ள்) விவேசனத்தால் தனது நாசத்தை நிச்சயித்து (அதாவது தானில்லாமற் போகிறவனாகக் கண்டு) மறுபடியும் போகத்தை இச்சிக்கிறதில்லை [தனது நாசத்தின் நிச்சயமாயின் போகத்தில் இச்சை இல்லை என்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்] மரண இச்சையுடையவனாய்ப் பூமியில் படுக்கையை யடைந்த எந்தப் புருஷன் விவாகத்தை இச்சிப்பான்? ஒருவனும் இச்சியான்.

[முற்கூறிய அர்த்தத்தினைப் பிரகிருத (ஆரம்பிக்கப்பட்ட) சுருதியினால் ஆரூடஞ் செய்கின்றார்]

சுலோகம் 222.

இத்யபிப்ரேத்ய போக்தாரமாக்ஷிபத்யவிசங்கயா |
கஸ்ய காமாயேதி தத: சரீராநுஜ்வரோ ந ஹி ||

(இதற்குத் தமிழ்க்கவி—யாவனின்புற வென்பதிவ்வகை யெண்ணியேசமுசயமற, ஆவலித்துளு வானை நீக்கிய தாதலர் ஓடல் வெம்மைபோம்.)

(இ-ள்) "எவனுடைய காமத்தின் பொருட்டு" என்னுஞ் சுருதி கூடஸ்தனது அல்லது சிதாபாசனது பாரமார்த்திக போக்திருத்தன்மையின் அபாவத்தினை அபிப்பிராயத்திற்கு விஷயமாக்கிச் சங்கையின்றிய தன்மையினால் போக்தாவினை † நிஷேதஞ்செய்கின்றது. [இவ்வாறு போக்தாவின் நிஷேதம் உண்டாகுக, அதனால் என்ன பயன் உண்டாகின்றதெனக் கூறுகின்றார்.] அதனால் ஞானிக்கு மூன்று சரீரத்தைப் பின் பற்றிய தாபம் (துக்கம்) இல்லாததாகின்றது; அதாவது சோக நிவிர்த்தியுண்டாகின்றது (நிரங்குச திருப்தியுண்டாகின்றது).

(நிரங்குச திருப்தியாகிய ஏழாவது அவஸ்தையுண்டாயின் ஞானம் சம்பூர்ணமாம் இவ்வாறே யோகானந்தத்தும் கூறுதல் வருமாறு. யோகானந்தம் சுலோகம் 84. தமிழ்க்கவி 40. எப்போது "நான் கிருதார்த்தன் கர்த்தவ்வியப் பிராப்தவ்வியங்களின் அபாவமுடையவனாயிருக்கின்றேன்" என்று கிருதார்த்தத் தன்மையின் புத்தி யுண்டாகின்றதோ, அப்போது ஞானத்தின் சம்பூர்ணத்தன்மை அறியத்தக்கதாம்.)

அத்துவித ரசமஞ்சரி.

[சகல சகத்தும் காலத்திரயத்திலும் மாயாமாத்திரமே யென்று திருஷ்டாந்த பூர்வகமாக உறுதிப்படுத்தல்.]

---

† நிஷேத உபதேசத்தால் (அதத்வியாவிருத்தியாகிய நிஷேத உபதேசத்தால்) நான் என்னும் சொற்பொருள் முழுவதையும் நிஷேதித்தலால் நான் என்னும் சொற்பொருளாகிய கூடஸ்தனது நீக்கமும் நேருதலால், நான் பிரம்மம் என்னும் ஞானம் எப்படியுண்டாகும்? என்னும் சங்கையும், சமாதானமும், பஞ்சதசி திருப்திதீபம் சுலோகம் 59, 60, கவி 56-ல்காண்க.

4

" சொல்லுதினை வுறுபோதும் மற்றதெழும் முன்னுமது தொலைந்த போதும், இல்லதுதான் என்றாலும் இவ்வுலகம் இலங்குகின்ற திறும்பூ தாமே, அல்லததி சயமென்னை போலு மகேந் திரசால மான திங்குப், புல்லுறுமா யாவியினாற் கற்பித மென் றாலுமிகப் பொலியும் அன்றே.

(இ-ள்) நாமருப வடிவமான சகலப் பிரபஞ்சமும் உற் பத்திக்கு முன்னும் தோற்றுகின்ற காலத்திலும் நாசத்திற்குப் பின்னும் இல்லவே இல்லை. ஆயினும் அநிர்வசனீயமாய் பேத பின்னமாய்க் காணப்படுகின்றது ஆச்சரியமே; அல்லது ஆச் சரியந்தான் என்ன இருக்கின்றது ? மகேந்திரஜாலப்பிரபஞ்ச மானது இவ்வுலகில் யதார்த்தத்தில் இல்லாததாய் மகேந்திர ஜாலிகனது மாயாவிசித்திரத்தினால் கற்பிதமாயினும் நன்றாய்க் காணப்படுகின்றது போலவாம்.

(கருத்துரை) சகல சகத்தும் யதார்த்தத்தில் இல்லாததாய் மாயையினால் கற்பிதமாயினும் காணப்படுகின்றது; என்பதாம்.

முண்டக சுருதி.

பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ் சித்யந்தே ஸர்வஸம்ஸயா : |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||

(இதன் பொருள்) அப்பராவரத்தைப் பார்க்கவே இரு தயக்கிரந்தி (அந்நியோந்நிய அத்தியாசமாகிய அகங்காரக் கிரந்தி) பிரிகின்றது, சகல சம்சயங்களும் சிதைகின்றன, இவனது கர்மங்களும் நசிக்கின்றன. பரம்—பிரம்மலோகாதி பதங்கள்; அவரம்—எதனிற்றாழ்ந்தனவாயிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பிரத்யகபின்ன பரப்பிரஹ்மம் பராவரம் எனப் படும்.

ஈசாவாஸ்ய சுருதி.

யஸ்மிந் ஸர்வாணி பூதாநி யாத்மைவாபூத் விஜாநத:|
தத்ர கோ மோஹ: க: ஸோக ஏகத்வமநு பஸ்யத: ||

(இதன் பொருள்) எந்த ஆத்மாவின்கண் பரமார்த்தமா யறிபவனுக்கு எல்லாப் பூதங்களும் ஆத்மாவே யாகின்றனவோ அதாவது அகங்காராதி சர்வப்பிரபஞ்சமும் இல்லாதனவாய் ஆத்மாவே மிஞ்சுகின்றதோ, அவ்வாத்மாவின்கண் ஐக்கியத்தைக் காண்பவனுக்கு மோகமேது ? சோகமேது ? என்பதாம்.

விவேக சூடாமணி.

விரிபவத் தருவி னுக்கு வீங்கிய தமசே வித்தாம்
மருவுதே காத்ம புத்தி மற்றதன் முளையாம் காமம்
தருவதன் தளிராம் கர்மம் தாக்கிய சலமாம் தேகம்
உரவடிக் கட்டை யாகும் உயிர்களே பணைகள் ஆகும்.

பொறிநிரை நுனிகள் ஆகும் புலன்களே மலர்கள் ஆகும்
செறிபல வான கன்மம் செய்ததுன் பங்கள் யாவும்
உறுபலம் அப்ப லத்தை உண்பது சீவன் என்னும்
பறவையே இவித மாகப் பவத்தரு பரவல் ஆகும்.

மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியு ளாணி யைப்போல்
திருசியத் திரளில் நின்றும் திகழ்ந்திடும் தன்னான் மாவை
அருமையாம் புத்தி யாலே அசங்கமாய் அசலம் ஆக
மருவிய தென்று கண்டு மாசற வகுக்க வேண்டும்.

இவ்விதம் வகுத்த பின்னர் இங்குள திருசி யங்கள்
அவ்வித ஆன்மா என்றே அநிசமும் பிரவிலா பித்துத்
தவ்வற ஆன்மா ஆகத் தாணியில் இருப்பவன் தான்
செவ்விய முத்திப் பேற்றைச் சேர்ந்தவன் அநக மைந்தா.

ஆதலால் அகங்கா ராதி அறிந்திடும் கரியே ஆன்மா
பேதமில் துயிலின் கண்ணும் பேதியா திருப்ப தாலே
சோதியாம் ஆன்மா நித்தன் சுருதியும் ஆங்கே சொல்லும்
சாதுவே யதனால் ஆன்மா சத்தசத் திற்கு வேறே.

28

தொந்தமாம் பவத்தைச் செய்யும் துட்டமாம் பிரதி பந்தம்
மைந்தனே அநேக மேனும் மருவிய அவற்றிற் கெல்லாம்
முந்திய விகாரம் ஆக முளைத்திடும் அகங்கா ரந்தான்
சந்ததம் மூலம் அத்தைச் சருவதா ஒழிக்க வேண்டும்.

திருமலப் பிரமா நந்த நிதிமகா வலியைப் பெற்ற
திரிகுணச் சிரங்க ளூற்ற தீயகங் காரப் பாம்பால்
இருதயப் பூமிக் குள்ளே யிருளுறச் சூழப் பட்டிங்
கொருவரும் பெருத வண்ணம் ஒளித்திடப் பட்ட தாகும்.

தீரனும் ஒருவன் ஞானத் திறமையாந் திகழ்வா ளாலே
கோரமாஞ் சிரங்கள் மூன்றுங் கொய்தகங் காரம் ஆன
சாரமில் சர்ப்பந் தன்னைச் சற்றுமில் லாத றுத்துப்
பூரணச் சுகஞ்செய் விக்கும் புகழ்நிதி புசிக்க வல்லோன்.

வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தி லெம்மட்
டற்பமு மிருக்கு மம்மட் டரோகமில் லாது கண்டோம்
அப்படி யோகி யர்க்கும் அகங்காரம் எம்மட் டம்மட்
டொப்பிலா முத்தி சித்தி உள்ளவா றுதிப்ப தில்லை.

பகையகங் காரம் யாதும் பற்றற நசித்த தாலும்
அதுநின்று செய்வி கற்பம் அறவுமே அடங்க லாலும்
சுககநப் பிரத்திய கான்ம சொருபநல் விவேகத் தாலும்
அகம்அது ஆனேன் என்றே அடையலாம் தத்து வத்தை.

சொருபநற் சத்தை யாலே சுயமுமே சத்துப் போலாய்
வெருளுறுங் கர்த்தா வாகி விகாரியாய்ச் சொருபந் தன்னின்
பிரதிபிம் பத்தை மேவிப் பிறங்கிய அகங்கா ரத்தின்
மருவிய ஆன்ம புந்தி மாற்றுவாய் விரைவில் மைந்தா.

சுககநச் சொருப மாகிச் சுத்தசிந் மூர்த்தி யாகுந்
தகவுள பிரத்திய கான்ம தத்துவ மாமு னக்கிவ்
அகமுடன் அத்தி யாசம் அடைந்ததாற் சநந மாதிச்
சகலமாந் துயர்மி குந்த சம்சாரம் உற்ற தன்றே.

## 29

புகழ்சதா நந்த சித்தாய்ப் பூரண ஏக ரூபத்
தகவுள நிருவி காரத் தத்துவம் ஆம்உட னக்கிவ்
அகமுடன் அத்தி யாசம் அன்றியிற் சுபாவ மாக
இகமுமிச் சம்சாரந்தான் ஏதுமே எங்கும் இல்லை.

ஆதலால் துய்ப்போன் கண்டத் தடைத்தகன் டகமே போல
வாதகம் உனக்குச் செய்து வந்தஇவ் அகங்கா ரத்தைக்
கோதிலா ஞான வாளால் கொய்துநன் றுன்சொ ரூப
பூதசாம் பிராச்ய இன்பம் புசித்திடு நினைத்த வாறே.

பிந்தியும் பரமார்த் தத்தைப் பெற்றதாற் காதல் நீக்கி
நிந்தைசேர் அகங்கா ராதி நின்றவிர்த் தியினை மீட்டிங்
கந்தவுன் சொரூபா நந்தம் அநுபவித் தகண்டம் ஆகிப்
பந்தமில் நிருவி கற்ப பதத்தினில் வெறிதி ருப்பாய்.

பெருகிய அகந்தை மெத்தப் பெயர்த்திடப் பட்ட போது
ஒருகண மேனும் மற்றும் உளத்தினுல் நினைக்கப் பட்டால்
விரிவுறப் பின்னும் உண்டாய் விட்சேபம் வெகுவாய்ச் செய்யும்
மருவுகாற் றுல லைந்த மழைக்கால மேக மேபோல்.

பலபுலச் சிந்தை யாலிப் பகையகங் காரத் திற்கிங்
கலைவுற அவகா சத்தை அற்பமும் அளிக்க வொண்ணு
துலசெலு மிச்சை யுய்ய ஊற்றிய நீரே போலிச்
சலவகங் காரம் உய்யச் சலசிந்தை ஏது அன்றே.

தேகாதி சிந்தை யுற்ருேன் திருசியப் பாசம் பெற்ருேன்
தேகாதி சிந்தை யற்ருேன் திருசியப் பாசம் விட்டோன்
ஆகாத சிந்தை தானே ஆதலால் பேதங் கொண்டிவ்
ஏகாத பவபந் தத்திற் கேதுவாய் இசையும் மைந்தா.

காரியம் வளரு மாகில் காரண மான வித்தும்
பாரினில் வளர்ந்த தாகப் பார்க்கலாம் அதுதான் நீங்கில்
காரண மான வித்தும் கடிதினில் நீங்க லாலே
தீரனே காரி யத்தைத் தீர்த்திட வேண்டும் முன்னம்.

காரிய மான சிந்தை கருத்தினில் வளரும் போது
காரண வாத னேக்கோன் கருத்தினில் வளரா நிற்கும்
காரண வாத னேக்கோள் கருத்தினில் வளரும் போது
காரிய சிந்தை யுந்தன் கருத்தினில் வளரும் மைந்தா.

வந்தவச் சிந்தை யாலே வாகியச் செய்கை யுண்டாம்
தொந்தமாம் சிந்தை செய்கைத் தொடர்பினுல் முன்னு ரைத்த
அந்தவா தனேவ ளர்ந்திங் ககிலமாம் சீவ ருக்கும்
பந்தமாம் சம்சார த்தைப் பலவிதம் படைக்கும் அன்றே.

ஓதிய ஏது வாலே ஒழிவிலா துதித்த இந்தப்
பேதமாம் பவபந்தத்தைப் பெயர்த்திட வேண்டி முன்னர்
ஓதிய மூன்றை யுந்தான் ஒழித்திட வேண்டும் அத்தில்
ஏதுநல் உபாயம் என்னில் இதனை நீ இயம்பக் கேளாய்.

எவ்வவத் தையிலும் எந்த இடத்திலும் எக்கா லத்தும்
விவ்விதத் தோற்றம் பெற்று வேறெனக் காண்ப வெல்லாம்
செவ்விய பிரம மேயாம் சிறிதும்வே றில்லை யென்னும்
இவ்விதப் பார்வை தான்இங் கியம்பிய நல்லு பாயம்.

ஓதிய பார்வை யாகும் உண்மைவா தனையு ரத்தால்
கோதுறு செய்கை முன்னர்க் குவிந்திடும் பின்பு சிந்தை
யாதுமே யிறக்கும் பின்னர் ஏதுவா தனைய டங்கும்
வாதனை யடக்கந் தானே வழுவிலாச் சீவன் முத்தி.

சருவமும் பிரமம் என்னும் சத்துவா தனைவ ளர்ந்தால்
மருளகங் காரம் ஆதி மலினவா தனைய டங்கும்
கருமையாம் எவ்வி டத்தும் கலந்துள அந்த காரம்
அருணனின் காந்தி தோன்றும் அளவிலே அழியு மாபோல்.

இருளிருட் செய்கை யாக இசைந்துள அனர்த்தம் எல்லாம்
இரவிநின் றுதிக்கும் போதிங் கிறந்திடும் நீதி யேபோல்
அருவஅத் துவிதா னந்த அனுபவம் உதிக்கும் போது
பெருகிய பந்தம் அத்தால் பெற்றதுன் பமும்இ லாவாம்.

திருசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப்
பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்திங்
கரியனே வெளியில் உள்ளில் ஆவது சமாதி பெற்றுக்
கருமபந் தம்வ ரைக்கும் காலம்நீ தள்ளு வாயே.

சொருபநிட் டையையோர் காலும் சொற்பமும் தவிர ஒண்ணு
தரணியில் அந்த நிட்டை தவிர்தலே காலன் என்று
பிரியனே பகவான் ஆன பிரமபுத் திரச்சு சாதன்
பரசநச் சுசாதீ யத்தில் பலவிதம் பகர்ந்தா னன்றே.

ஆதலாற் சொருப நிட்டை அன்றியும் தவிர்தல் ஞானிக்
கேதமாம் அநர்த்தம் ஆகும் ஏதெனில் தவிர்த லாலே
சாதமாம் மோகம் அத்தால் சனித்திடும் அகந்தை அத்தால்
கோததாம் பந்தம் உண்டாம் கூடிடும் அவற்றால் துன்பம்.

இடைவிடாத் தியானத் தாலே இருதயஞ் சுத்தம் ஆகித்
திடமுறப் பிரமத் தின்கண் தியங்கிடா தடங்கும் எப்போ
தடர்மிகும் அகண்டா னந்த அநுபவ ஏதுவான
சடமிலா நிருவி கற்ப சமாதியப் பொழுதே யுண்டாம்.

ஆனவச் சமாதி யாலே அகிலவா சனைமு டிச்சும்
போனதாம் விவிதம் ஆகப் பொருந்திய கன்மம் பொன்றும்
ஏனையுன் வெளியில் எங்கும் என்றுமோர் முயற்சியின்றி
ஊனமில் சொருபத் தோற்றம் ஒருமையாய் ஒளிரா நிற்கும்.

சொருப சாரம்

சித்துருவம் ஆகிச் செகசாட்சி தாம்ஆன
முத்தரைக் காமாதி முனியாவே—சித்தத்தில்
இங்கற்ப வாசனைகள் எல்லாம் எடுத்தருந்திச்
சங்கற்பம் இல்லாத தால்.

### விஞ்ஞான சாரம்

அடியும் முடியும் நடுவுமிலா அகண்ட ஒளியாம் ஒருதனையே
கடிய நினைவாம் மாயையினால் கலங்கி வேறாய் அனேகமாய்
படிக மலையிற் சுனைகளைப்போல் பார்த்தல் எனவே
அதிட்டான
முடிவில் தன்னைத் தான்கண்டே மோகம் இன்றிப்
பார்த்திருப்பர்.

சிவஞான வள்ளலார் சாத்திரம், தேயவுபதேசம்

ஆறுகடல் கண்டுவர ஆதரித்த தும்மொருவன்
வீறுபுலி கண்டுவந்த வீறும்—கூறிமிடில்
உப்புக் கடலாடி யோடிவந்த தும்மொக்கும்
செப்புசிவங் கண்டுதிரும் பல்.

என்பன முதலியவையாம்.

இவ்வாறு முமுட்சுக்கள் காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரணாதி சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் (வீடு) உளதாம் என்பதையறிந்து, ஆன்ம ஞானத்தால் அஞ்ஞான நீக்க பூர்வகம் அகங்காரக் கிரந்தி நீக்கஞ்செய்து, காம மரணாதி சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அதாவது வீடுபேறு பெறுவாராக.

ஆன்ம ஞானத்தை யடைவதற்கேதுவான மகாவாக்கிய விசாரத்தின் விசேட விபரங்கள், மடாலய வெளியீடு 2, "மகா வாக்கிய விசாரம்" என்னும் நூலிற் காண்க.

காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால்
காரிய காம மரண நீக்கம்

முற்றிற்று.

ஓம் தத் ஸத்

அ. 1



சாம வேதத்தின்

# வச்சிர சூசிகை உபநிடதம்

## மூலமும் உரையும்.

இஃது
சித்தூர் மாவட்டம்
ஏகாம்பரக் குப்பம் பேட்டை
ஸ்ரீ சிவ சுப்பிரமணியர் மடாலயம்
நிறுவியவரும், அதிபதியும் ஆன;
வேத மொழிபெயர்ப்பு ஆசிரியர்
காசிவாசி

**ஸ்ரீ. வீர. சிவானந்த யதீந்திர சுவாமிகளால்**

சமஸ்கிருதத்திலிருந்து
தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றது.

வெளியீடு :
ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள்
மடாலயம்
மூன்றும் மடாதிபதி

**ஸ்ரீ. மகா. கோவிந்த சுவாமிகளால்**

பதிப்பித்து வெளியீடு செய்யப்பெற்றது.
இரண்டாம் பதிப்பு.

1—7—1986

 [ விலை ரூ. 2-00

அ. 2

முதல் பதிப்பு 1934.
இரண்டாம் பதிப்பு 1-7-1986.

வெளியீடு :
ஸ்ரீ. சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள்
மடாலயம்.
K. V. P. R. பேட்டை.
(குமார வெங்கிடபெருமாள் ராஜாப் பேட்டை)
ஏகாம்பரக் குப்பம் போஸ்டு,
நகரி வட்டம், சித்தூர் மாவட்டம்.
(ஆந்திரா பிரதேசம்).
PIN. 517 592.

அச்சிட்டோர் :
சேகர் பிரிண்டர்ஸ்,
திருச்சி-2.

## முதல் பதிப்பின், முகவுரை (சுருக்கம்).

உலகனைத்திற்கும் ஓர் ஒப்பற்ற முழுமுதற் கடவுள் உண்டு என்பது சமயகோடிகளுக்கெல்லாம் ஒப்பமுடிந்ததாமாயினும், அகிலாண்டகோடியெல்லாம் தன்பால் இருத்தி, முத்தொழில் செய்து, தழைத்தோங்கும் அத்திருவருளைப் பெற்று உய்ந்த பிரம்ம ஞானியரான, முனிவர், சித்தர் முதலியோர்களே காலம் நோக்கிக் கருணை மிகுதியால், மன்னுயிர்கட்கு இன்னுணர்வளித்து, நன்னெறியடைவித்துப், பேரின்பம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கச் செய்தவர்கள் என்பது துணிபாம்.

ஆகவே அத்தகைய பிரம்ம ஞானியர்களின் இயல்பை அறிந்து, அவர்கள் அறிவித்த நன்னெறிப்படி ஒழுகுவது, மக்களின் உய்தியாகிய பேரின்பப் பெருவாழ்வுக்கு ஏதுவாகும்.

அத்தகைய பிரம்ம ஞானியர்களின் இயல்பை மிகவும் விளக்கிக் கூறுவது இந்த வச்சிர சூசிகை உபநிடதமாகும்.

இந்த வச்சிரசூசிகை உபநிடதம் கூறுவதின் கருத்துப் பொருள், பிரம்ம ஞானம் உண்டானவன் எவனோ அவன், பிரம்ம ஞானியாகவும், பிராமணனாகவும் ஆகிறான் என்பதாம்.

எல்லா வேதாந்த உபநிடதங்களின் கருத்துப் பொருளும் இதுவேயாகும்; என்பது பேரறிஞர்கள் யாவரும் அறிந்ததேயாகும்.

ஆதலால் இத்தகைய பிரம்ம ஞானியர்களின் இயல்பைக் குறித்த விசேட விபரங்களை மிகவும் விளக்கிக்கூறியறிவிக்கும், இந்த வச்சிர சூசிகை உபநிடதத்தைத் தமிழில் மொழி பெயர்த்து, ஸ்ரீ. சுவாமி அருணகிரிநாதர் அவர்கள் மடாதிபதி யாக உள்ள, சென்னை அகத்திய குருகுலம் ஸ்ரீ. நாராயணதேசிகர் மடாலயத்திற்குப் பதிப்புரிமை வழங்கியிருக்கிறேன்.

இங்ஙனம்,

ஸ்ரீமுகஷுதைமீ 1934 — வேத மொழிபெயர்ப்பு ஆசிரியர்
காசிவாசி
வீர. சிவானந்த யதீந்திர சுவாமிகள்.

---

# இரண்டாம் பதிப்பின் முகவுரை.

முதல் பதிப்பின் முகவுரையில் ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள், ''இந்த வச்சிர சூசிகை உபநிடதம் கூறுவதின் கருத்துப் பொருள், பிரம்ம ஞானம் உண்டானவன் எவனோ,அவன் பிரம்ம ஞானியாகவும், பிராமணனாகவும் ஆகிறான்; என்பதாம். எல்லா வேதாந்த உபநிடதங்களின் கருத்துப் பொருளும் இதுவேயாகும்; என்பது பேரறிஞர்கள் யாவரும் அறிந்ததேயாகும்.'' என்று கூறிய கருத்துப் பொருளே, ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கர பகவத்பாத ஆசாரிய சுவாமிகள் அருளிய ''மனீஷா பஞ்சகம்'' என்னும் நூலில் கூறியுள்ளனர் என்பது பேரறிஞர்கள் யாவரும் அறிந்ததேயாகும்.

ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் முதல் பதிப்பின் பதிப்புரிமையை, சென்னை அகத்திய குருகுலம் ஸ்ரீ நாராயண தேசிகர் மடாலயத்திற்கு வழங்கியபடி, இம்மடாலயத்தின் மடாதிபதி ஸ்ரீ. சுவாமி அருணகிரிநாதர் அவர்களால், 1934ஆம் ஆண்டு முதல் பதிப்பாகப் பதிப்பித்து வெளியீடு செய்யப்பெற்றது.

மேற்படி நாராயண தேசிகர் மடாலயத்தின் தற்கால மடாதிபதி ஸ்ரீ சுவாமி ஞானானந்தா அவர்கள், மேற்படி வச்சிர சூசிகை உபநிடதத்தின்,

அ. 6

தமிழ் மொழிபெயர்ப்பின் பதிப்புரிமையை இப்போது, ஏகாம்பரக்குப்பம் பேட்டை, ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடாலயத்திற்கு வழங்கியிருக்கிறார்கள்.

ஆகவே இப்போது 1986ஆம் ஆண்டு ஏகாம்பரக் குப்பம்பேட்டை ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடாலய வெளியீடு இந்த இரண்டாம் பதிப்பாகப் பதிப்பித்து வெளியீடு செய்யப்பெறுகிறது.

ஸ்ரீ சிவசுப்பிரமணிய
சிவானந்த யதீந்திர
சுவாமிகள் மடாலயம்.
ஏகாம்பரக் குப்பம்
பேட்டை.
சித்தூர் மாவட்டம்.
(ஆந்திரா பிரதேசம்.)
1-7-1986.

இங்ஙனம்,
மகா. கோவிந்த சுவாமி.
3. ஆம் மடாதிபதி.

# பொருளடக்கம்.

பக்க
எண்.

உ
ஓம் தத் ஸத்
(சர்வ வேதாதி சாஸ்திரங்களும்
பிரம்ம ஞானியே பிராமணன்
எனக் கூறுகின்றன;
என்று விளக்கிக்கூறிச் சகலருக்கும் அறிவிக்கும்,)

சாம வேதத்தின்

# ★ வச்சிர சூசிகை யுபநிடதம்

## மூலமும் உரையும்.

சாந்தி:

ஓம். ஆப்யாயந்து மமாங்காநி வாக் ப்ராணஸ் சட்சு: ச்ரோத்திர மதோ பலமிந் த்ரியாணிச சர்வாணி; சர்வம் ப்ரஹ்ம மோபநிஷதம், மாஹம் ப்ரஹ்ம மநிராகுர்யாம். மாமாப்ரஹ்மநிரா கரோத். அநிராகரணமஸ்து; அநிராகரணமஸ்து; ததாத்மநி நிரதே ய உபநிஷத்சு தர்மாஸ் தே மயி சந்து தே மயிசந்து.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

(இதன் பொருள்)

ஓம். எனது அங்கங்களைப் பாதுகாப்பாற்றுக. வாக்கு பிராணன் கண் சுரோத்திரம் மற்றும் ஆற்ற லுள்ள இந்திரியங்கள் அனைத்தையும்; சர்வம் பிரம உபநிடதம், பிரமத்தை யான் விலக்கேன். பிரமம் என்னைத் தள்ளிவிடற்க. விலக்காமையுளதாக; விலக்காமை யுளதாக; அவ்வான்மாவிலொருப்பட்ட உபநிடதங்களிலுள்ள தருமங்களெவையோ அவை என்பால் உளதாக அவை என்பால் உளதாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

★ 108. உபநிடதங்களின் வரிசையில் -
இது 8ஆம் உபநிடதம் ஆகும்,

2

உ

சாம வேதத்தின்

# வச்சிர சூசிகை யுபநிடதம்

மூலமும் உரையும்.

---

பிரஹ்ம ஸ்தோத்ரம்.

---

யக்ஞாநாத் யாந்தி முநயோ ப்ராஹ்மண்யம்
பரமாத்புதம்
தத்ரைதத் ப்ரஹ்ம தத்வ மஹமஸ்மீதி சிந்தயே.

இதற்குத் தமிழ்க் கவி.

எழின்மிகு முனிவர் முன்பு
எதையுளத்(து) உணர்த லாலே
அழிவறு வியப்பு வாய்ந்த
அந்தணத் தன்மை ஏய்ந்தார்
ஒழிவ(று)இப் பிரமந் தன்னை
ஒழி(வு)இலா(து) இலங்கும் மாயை
இழிதர யான்என்(று) உன்னி
இதயத்தில் இருத்தி வாழ்வாம்.

சித் சதானந்த ரூபாய சர்வதீ வ்ருத்திசாக்ஷிணே
நமோ வேதாந்த வேத்யாய ப்ரஹ்மணே
அநந்தரூபிணே.

இதற்குத் தமிழ்க் கவி.

உள(து)ஒளி இனிய(து) என்னும்
உருவம(து) ஆகி மற்றும்
கிளர்மதி விருத்தி கட்குக்
கில(ம்)அறு சாட்கி ஆகி
அள(வு)அறு மறையின் சென்னி
அறிந்திடப் பொருந்தி என்றும்
வளர்தரும் அனந்தம் என்னும்
பிரமத்தை வணங்கு வாம்ஆல்.

# உபநிடதத் தொடக்கம்

வாக்கிய எண். | மந்திரம்

1. ஓம் வஜ்ர ஸூசிம் ப்ரவக்ஷ்யாமி சஸ்த்ர மஞ்ஞான பேதனம்
தூஷணம் ஞானஹீநாநாம் பூஷணம் ஞானசக்ஷுஷாம்.

## பதவுரை

| | |
|---|---|
| ஞானசக்ஷுஷாம் | ஞானக்கண்ணுடையாருக்கு |
| பூஷணம் | துதியும் |
| ஞானஹீநாநாம் | ஞானக்கண்ணிலாருக்கு |
| தூஷணம் | பழிப்பும் |
| அஞ்ஞானபேதனம் சஸ்த்ரம் | அஞ்ஞானத்தை யழிக்கும் [ஆயுதமுமாகிய |
| வஜ்ரஸூசிம் | வச்சிரஸூசிகை [உபநிடதத்தை |
| ப்ரவக்ஷ்யாமி. | இனிது கூறுகின்றேன். |

## பொழிப்புரை

மெய்ஞ்ஞானக் கண்ணுடையாருக்கு அலங்கார மாகவும், உண்மையறிவாகிய கண்ணில்லாதவருக்குப் பழிப்பாயும், அஞ்ஞானத்தை யறுக்கின்ற வாளாகவும் உள்ள வச்சிரஸூசிகை யென்னும் உபநிடதத்தை நன்கு சொல்கின்றேன். (1)

வாக்கிய எண்.

2. ப்ரஹ்ம க்ஷத்ரிய வைஸ்ய ஶூத்ரா இதி சத்வாரோ வர்ணா: தேஷாம் வர்ணநாம் ப்ராஹ்மண ஏவ ப்ரதான இதி வேதவசநா நுரூபம் ஸ்ம்ருதிபி ரப்யுக்தம்.

## பதவுரை

| | |
|---|---|
| ப்ரஹ்ம | பிராமணன் (அந்தணன்) |
| க்ஷத்ரிய | க்ஷத்திரியன் (அரசன்) |
| வைஸ்ய | வைசியன் (வணிகன்) |
| ஶூத்ரா | சூத்திரன் (வேளாளன்) |
| இதிசத்வாரோ வர்ணா: | என நான்கு சாதியர் உளர் |
| தேஷாம் வர்ணாநாம் | அச்சாதியார்களுள் |
| ப்ராஹ்மண ஏவ | பிராமணனே |
| ப்ரதான இதி | முக்கியனென்று |
| வேத வசநா நுரூபம் | வேத வாக்கைப் போன்று |
| ஸ்ம்ருதிபி: அப்யுக்தம். | ஸ்மிருதிகளாலுங் கூறப் [பட்டிருக்கின்றது. |

## பொழிப்புரை

பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என நான்கு வருணத்தவர்க ளிருக்கின்றனர். அவர்களுள் பிராமணனே சிறந்தவன் என வேதங் கூறுவது போல ஸ்மிருதிகளுங் கூறுகின்றன என்பதாம். (2)

வாக்கிய
எண்.

3. தத்ர சோத்ய மஸ்தி, கோவா ப்ராஹ்மணோ நாம? கிம் ஜீவ:? கிம் தேஹ:? கிம் சாதி:? கிம்ஞானம்? கிம் கர்ம? கிம் தார்மிக?இதி.

## பதவுரை

| | |
|---|---|
| தத்ர | அவ்விடயத்தில் |
| சோத்ய மஸ்தி | வினவ வேண்டியதுண்டு |
| கோவா ப்ராஹ்மணோ [நாம? | பிராமணன் யாவன்? |
| கிம் ஜீவ:? | சீவனா? |
| கிம் தேஹ:? | உடம்பா? |

| | |
|---|---|
| கிம் ஜாதி:? | சாதியா? |
| கிம் ஞானம்? | ஞானமா? |
| கிம் கர்ம? | கருமமா? |
| கிம் தார்மிக? | தருமஞ் செய்பவனா? |
| இதி. | என்பது. |

பொழிப்புரை

பிராமணனே சிறந்தவன் என்றதில் வினாக் களுண்டு. அவை, பிராமணத் தன்மை யென்பது சீவனா? அல்லது தேகமா? அல்லது சாதியா? அல்லது ஞானமா? அல்லது கருமமா? அல்லது தருமமா? என்பன. (3)

வாக்கிய
எண்.

4. தத்ர ப்ரமோ ஜீவோ ப்ராஹ்மண; இதி சேத்தந்ந, அதீதா நாகதாநே கதேஹாநாம் ஜீவஸ்யைக ரூபத்வாத் ஏகஸ்யாபி கர்மவசாத் அகே தேஹ சம்பவாத் சர்வ சரீராணும் ஜீவஸ்யைகரூபத் வாச்ச தஸ்மாந் ந ஜீவோ ப்ராஹ்மண: இதி.

பதவுரை

| | |
|---|---|
| தத்ர | அவற்றுள் |
| ப்ரதமோ | முதலாவது |
| ஜீவோ ப்ராஹ்மண; | சீவன் பிராமணன் |
| இதிசேத்தந்ந | என்பது கூடாது |
| அதீதா | போனவைகளும் |
| அநாகத | வருபவைகளுமான |
| அநேக தேஹாநாம் | அநேக தேகங்களில் |
| ஜீவஸ்ய | சீவன் |
| ஏக ரூபத்வாத் | ஒரே வடிவனாதலின் |

6

| | |
|---|---|
| கர்ம வசாத் | கரும வசத்தினுல் |
| ஏகஸ்யாபி | ஒரே சீவனுக்கும் |
| அநேகதேஹ | பலவிதமான சரீரங்கள் |
| சம்பவாத் | பொருந்து மாதலின் |
| சர்வ சரீராணும் | எல்லாச் சரீரங்களிலும் |
| ஜீவஸ்ய | சீவன் |
| ஏகரூபத்வாச்ச | ஒரே வடிவனுதலானும் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ஜீவோப்ராஹ்மண; | சீவனே பிராமணன் |
| இதி ந: | என்பதில்லை. |

பொழிப்புரை

போனவைகளும் வருபவைகளுமான அநேக தேகங்களிலும் சீவன் ஒருவனே யாதலாலும், ஒரே சீவன் கரும வசத்தால் அநேக தேகங்களை யடைதலாலும், தேகங்கலெல்லாவற்றிலுமுள்ள சீவன் ஒருவனே யாவனுதலாலும், சீவனே பிராமணன் என்னும் முதற்பட்சம் பொருந்தாது. (4)

வாக்கிய
எண்.

5. தர்ஹி தேஹோ ப்ராஹ்மண இதிசேத் தந்ந. ஆ சண்டாளாதிபர்யந்தாநாம் மநுஷ்யாணும் பாஞ்ச பௌதிகத்வேந தேஹஸ்ய ஏகரூபத்வாத் ஜராமரண தர்மாதர்மாதி சாம்ய தர்சநாத் ப்ராஹ்மண: ஸ்வேதவர்ண: க்ஷத்ரியோ ரக்தவர்ணோ வைஸ்ய: பீதவர்ண: சூத்ர: க்ருஷ்ணவர்ண இதி நியமா பாவத் பித்ராதி சரீரதஹநே புத்ராதீநாம் ப்ரஹ்மஹத்யாதி தோஷ சம்பவாச்ச தஸ்மாந் ந தேஹோ ப்ராஹ்மண இதி.

**பதவுரை**

| | |
|---|---|
| தர்ஹி | அங்ஙனமாயின் |
| தேஹோப்ராஹ்மண: | தேகமே பிராணன் |
| இதிசேத் தந்ந | என்பதுவுமில்லை |
| ஆ சண்டாளாதி பர்யந்தாநாம் மநுஷ்யாணாம் | சண்டாளன் முதல் (பிராமணன்) ஈருன மனி [தர்களுக்கும் |
| பாஞ்சபௌதிகத்வே ந | பஞ்ச பூதங்களின் காரிய [மாந்தன்மையால் |
| தேஹஸ்ய ஏகரூபத்வாத் | தேகம் ஒருவடிவாலானும் |
| ஜராமரண | மூப்பிறப்பு |
| தர்மாதர்மாதி | புண்ணியபாவம் [முதலியன |
| சாம்யதர்சநாத் | ஒப்பாய்க் காணப்படலா [னும் |
| ப்ராஹ்மண: ஸ்வேதவர்ண: | பிராமணன் வெண்மைநிற [முடையவன் |
| க்ஷத்ரியோ ரக்தவர்ண: | க்ஷத்திரியன் சிவப்புநிற [முடையவன் |
| வைஸ்ய: பீதவர்ண: | வைசியன் மஞ்சள் நிற [முடையவன் |
| சூத்ர: க்ருஷ்ணவர்ண: | சூத்திரன் கறுப்பு நிற [முடையவன் |
| இதிநியமா பாவாத் | என்னும் நியமங் கூடாமை [யானும் |
| பித்ராதி | தந்தைமுதலியவர்களின் |
| சரீர தஹநே | உடம்பைச் சுடில் |
| புத்ரா தீநாம் | (அவர்களுடைய)புத்திரன் [முதலியோர்களுக்கு |
| ப்ரஹ்ம ஹத்யாதி | பிராமணனைக் கொல்லல் [முதலான |

| | |
|---|---|
| தோஷ சம்பவாச்ச | தோஷம் பொருந்தலானும் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந தேஹோ ப்ராஹ்மண இதி, | தேகம் பிராமணன் என் [பதும்பொருந்தாது. |

பொழிப்புரை

சண்டாளன் முதல் பிராமணன்வரை எல்லா மனிதர்களுக்கும் பஞ்சபூதங்களின் காரியமாய் தேகம் ஒரே தன்மையாமாதலானும், மூப்பு, இறப்பு, புண்ணியம், பாவம், முதலியன யாவர்கட்கும் ஒப்பாகவே காணப்படலானும், வெண்மை நிறத்தன் பிராமணன், சிவப்பு நிறத்தன் க்ஷத்திரியன், மஞ்சள் நிறமுடையவன் வைசியன், கருநிறத்தன் சூத்திரன், என்னும் நியத மின்மையானும், புத்திரன் முதலானோர், தங்களுடைய பிதா முதலியவர்களின் உடம்பைச் சுடுங்கால் அவர்களுக்குப் பிராமணனைக் கொல்லுதல் முதலிய தோடம் வருதலானும், தேகம் பிராமணன் என்பதும் பொருந்தாது. (5)

வாக்கிய எண். (6. முன் பகுதி)

6. தர்ஹி ஜாதிர் ப்ராஹ்மண இதிசேத்தந்ந தத்ர ஜாத்யந்தர ஜந்து ஷ்வநேக ஜாதி சம்பவா மஹர்ஷயோ பஹவ: சந்தி.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அவ்வண்ணமாயின் |
| ஜாதிர்ப்ராஹ்மண: | சாதியே பிராமணன் |
| இதி சேத்தந்ந | என்பதும் பொருந்தாது |
| தத்ர | அதில் |
| ஜாத்யந்தர ஜந்துஷு | வேறு சாதியுடைய பிராணிகளிடத்து |

அநேக ஜாதி சம்பவா: பலவகைச் சாதியாய்ப் பிறந்த

மஹர்ஷய: மகரிஷிகள்

பஹவ: சந்தி. அநேகர் இருக்கின்றார்கள்

பொழிப்புரை

தேகம் பிராமணன் அன்றெனினும் சாதியே பிராமணனாகானோவெனின்? அதுவும் பொருந்தாது. என்னே? வேறு சாதி யுடைய விலங்குகளிற் பிறந்த பலவகைச் சாதியுடைய மகரிஷிகள் பலர்களிருக் கின்றார்க ளாதலின். (6. முன்)

வாக்கிய எண். (6. நடுப் பகுதி)

6. ரிஷ்யச்ருங்கோ ம்ருக்யா: கௌசிக: குசாத், ஜாம்பூகோ ஜம்புகாத், வால்மீகோ வல்மீகாத், வ்யாஸ: கைவர்த்த கன்னியகாயாம், சசப்ருஷ்டாத் கௌதம:, வசிஷ்ட உர்வஸ்யாம், அகஸ்த்ய: கலசே ஜாத இதி சுருதத் வாத்

பதவுரை

ரிஷ்யச்ருங்க: கலைக்கோட்டு மஹர்ஷி

ம்ருக்யா: மான் வயிற்றிற் பிறந்தவர்

கௌசிக: குசாத் கௌசிகர் தருப்பையிற் பிறந்தவர்

ஜாம்பூக: சாம்பூக ரிஷி

ஜம்பூ காத் நரியிற் பிறந்தவர்

| | |
|---|---|
| வால் மீ க: | வால்மீகி ரிஷி |
| வல் மீ காத் | புற்றிற் பிறந்தவர் |
| வ்யாஸ: | வியாசர் |
| கைவர்த்தகன்னிய காயாம் | மீன் வாணியப்பெண்ணிற் பிறந்தவர் |
| கௌதம: | கௌதம முனிவர் |
| சசப்ருஷ்டாத் | முயலின் பின் புறத்திற் பிறந்தவர் |
| வசிஷ்ட: | வசிஷ்டர் |
| உர்வஸ்யாம் | ஊர்வசி தாசியினிடத்திற் பிறந்தவர் |
| அகஸ்த்ய: | அகஸ்தியர் |
| கலசே ஜாத: | குடத்தில் பிறந்தவர் |
| இதி ஸ்ருதத்வாத். | எனக் கேட்கப் படலால். |

## பொழிப்புரை

கலைக்கோட்டுமஹர்ஷி மானிலும், கௌசிகர் தருப்பையிலும், சாம்பூகர் நரியிலும், வால்மீகி புற்றிலும், வியாசர் மீன் புல்லரின் கன்னியினிடத்தும், கௌதமர் முயலின் பின்புறத்திலும், வசிட்டர் ஊர்வசியினிடத்தும், அகத்தியர் குடத்திலும் பிறந்தார், என சாத்திரங்கள் கூறுகின்றன வாகலின் என்பதாம். (6. நடு)

வாக்கிய எண். (6. பின் பகுதி)

6. ஏதேஷாம் ஜாத்யா விநாப் யக்ரே ஞானப்ரதி பாதிதாரிஷயோ பஹவ: சந்தி தஸ்மாந்ந ஜாதிர் ப்ராஹ்மண இதி.

பதவுரை

| | |
|---|---|
| ஏதேஷாம் | இவர்களுக்குள் |
| ஜாத்யா விநாபி | சாதி யில்லாமலும் |
| அக்ரே | முன் காலத்தில் |
| ஞானப்ரதிபாதிதா | ஞானிகளெனச் [சொல்லப்பட்ட |
| ரிஷய: | ரிஷிகள் |
| பஹவ: சந்தி | அநேகர் இருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந ஜாதி:ப்ராஹ்மண இதி. | சாதி பிராமணன் அன்று. |

பொழிப்புரை

இவர்களை, சாதி யில்லாமலே முன்னர் தத்துவ ஞானிக ளென சாத்திரங்களிற் கூறப்பட்டிருந்தலின், சாதியே பிராமணன் என்பதுங் கூடாது. (6. பின்)

வாக்கிய
எண்.

7 தர்ஹி ஞானம் ப்ராஹ்மண இதிசேத் தந் ந க்ஷத்ரியாத யோபி பரமார்த்த தர்சின: அபிஞ்ஞா பஹவ: சந்தி தஸ்மாந் ந ஞானம் ப்ராஹ் மண இதி.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அன்றேல் |
| ஞானம் ப்ராஹ்மண: | ஞானமே பிராமணன் |

| | |
|---|---|
| இதி சேத் | என்னி லோ |
| தந் ந | அதுவு மன்று |
| க்ஷத்ரியாதயோபி | க்ஷத்திரியன் [முதலியவர்களும் |
| பரமார்த்த தர்சின: | பரம்பொருளையுணர்ந்த |
| அபிஞ்ஞா: | தத்துவஞானிகள் |
| பஹவ: சந்தி | அநேகரிருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந ஞானம் ப்ராஹ்மண இதி. | ஞானம் பிராமணன் [அன்று. |

## பொழிப்புரை

அஃதின்றேல் ஞானமே பிராமணன் என்பதும் பொருந்தாது. என்னை? பரம் பொருளையுணர்ந்து தத்துவஞானிகளாய் அநேக க்ஷத்திரியர்களு மிருக்கின்றார்களாதலின் என்பதாம். (7)

வாக்கிய எண்

8. தர்ஹி கர்ம ப்ராஹ்மண இதி சேத் தந். ந. சர்வேஷாம் ப்ராணிநாம் ப்ராரப்த சஞ்சிதாகாமி கர்ம சாதர்ம்ய தர்சனுத். கர்மாபி: ப்ரேரிதா: சந்தோ ஜநா: க்ரியா: குர்வந்தீதி தஸ்மாந் ந கர்ம ப்ராஹ்மண இதி.

## பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | ஆனால் |
| கர்ம ப்ராஹ்மண: | கருமமே பிராமணன் |

| | |
|---|---|
| இதி சேத்தந் ந | என்னிலோ, அதுவுமன்று |
| சர்வேஷாம் ப்ராணிநாம் | எல்லாப் பிராணிகளுக்கும் |
| ப்ராரப்த சஞ்சிதாகாமி | பிராரத்தம், சஞ்சிதம், [ஆகாமியம் என்னும் |
| கர்ம சாதர்ம்ய தர்சனுத் | கருமங்கள் சமமாகக் [காணப்படுதலானும் |
| கர்மாபி: | கருமங்களால் |
| அபிப்ரேரிதா: சந்த: | செலுத்தப் பட்டவர்களாய் |
| ஜநா: | சனங்கள் |
| க்ரியா: குர்வந்தி | தொழில்களைச் [செய்கின்றூர்கள் |
| இதி தஸ்மாத் | என்னும் அக் [காரணத்தாலும் |
| ந கர்ம ப்ராஹ்மண இதி. | கருமம் பிராமணன் [என்பதும் பொருந்தாது. |

## பொழிப்புரை

பிராணிகளனைத்திற்கும் பிராரப்தம், சஞ்சிதம், ஆகாமியம், என்னுங் கருமங்கள் ஒரே தன்மையாய்க் காணப்படுதலானும், சனங்கள் கருமங்களா லேவப் பட்டு தொழில்களைச் செய்கின்றூர்களாதலாலும், கருமமே பிராமணன் என்பதும் ஒவ்வாது. (8)

வாக்கிய
எண்.

9. தர்ஹி தார்மிகோ ப்ராஹ்மண இதிசேத் தந்ந, க்ஷத்ரியாதயோ ஹிரண்யதாதாரோ பஹவ: சந்தி.
தஸ்மாந் ந தார்மிகோ ப்ராஹ்மண இதி.

## பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அற்றேல் |
| தார்மிக: | தருமஞ் செய்வோன் |
| ப்ராஹ்மண இதிசேத் | பிராமணன் என்னிலோ |
| தந் ந | அதுவும் அமையாது |
| க்ஷத்ரியாதய: | க்ஷத்திரியன் [முதலியோர்கள் |
| ஹிரண்யதாதார: | பொன் தானஞ் செய்கின் [றவர்கள் |
| பஹவ: சந்தி | அநேகர் இருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| தார்மிக: | தர்ம முடையோன் |
| ப்ராஹ்மண; இதி ந. | பிராமணனென்பதும் [ஒவ்வாது. |

## பொழிப்புரை

ஆனால் தருமம் செய்வோன் பிராமணன் எனலாமோ எனின்? அதுவும் பொருந்தாது. பொன் தானஞ் செய்தல் முதலிய தருமஞ் செய்கின்ற க்ஷத்திரியர் முதலியோர்களும் பலர்க ளிருக்கின்றார்களாதலின், தருமஞ் செய்கின்றவனே பிராமணன் என்பதும் பொருத்தமன்று. (9)

வாக்கிய எண்.

10. தர்ஹி கோவா ப்ராஹ்மணோ நாம? ய: கச்சித் ஆத்மாந மத்விதீயம் ஜாதி குணக்ரியாஹீநம்,

ஷடூர்மி ஷட்பா வேத்யாதி சர்வ தோஷ ரஹிதம், சத்ய ஞாநாநந்தானந்த ஸ்வரூபம், ஸ்வயம்நிர் விகல்பம், அசேஷ கல்பநாதாரம், அசேஷ பூதாந்தர்யாமித்வேந வர்தமாநம், அந்தர் பஹிஸ்சாகாசவதநுஸ்யூதம், அகண்டானந்த ஸ்வபாவம், அப்ரமேயம், அநுபவைக வேத்யம், அபரோட்ச தயா பாசமாநம், கரதலாமலகவத் சாட்சாதபரோக்ஷீ க்ருத்ய க்ருதார்த்த தயா காம ராகாதி தோஷரஹித: சமதமாதி சம்பந்நோ பாவ மாத்ஸர்ய த்ருஷ்ணசா மோஹாதி ரஹிதோ தம்பாஹங்காராதிபிரசம் ஸ்ப்ருஷ்ட சேதா வர்ததே ஏவ முக்த லட்சணோ ய: ஸஏவ ப்ராஹ்மண இதி, ஸ்ருதி ஸ்ம்ருதி புராணேதிஹாசாநாமபிப்ராய: அந்ய தாஹி ப்ராஹ்மணத்வ ஸித்திர் நாஸ்த்யேவ.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அஃதின்றேல் |
| கோவா ப்ராஹ்மணோ நாம? | பிராமணன் என்பவன் [யாவன்? |
| ய: கஸ்சித் | யாவனொருவன் |
| அத்விதீயம் | அத்துவிதமாயும் |
| ஜாதி குணக்ரியாஹீ நம் | சாதி, குணம், கிரியை [அற்றதும் |
| ஷடூர்மி | இன்பதுன்பமுதலிய [ஆறு அலைகள் |
| ஷட்பாவ | பிறப்பு முதலிய [அறு விகாரங்கள் |

| | |
|---|---|
| இத்யாதி | இவை முதலிய |
| சர்வதோஷ ரஹிதம் | தோஷங்களற்றதும் |
| சத்ய ஞானனந்தானந்த ஸ்வரூபம் | சச்சிதானந்த அனந்த [வடிவும் |
| ஸ்வயம் நிர்விகல்பம் | இயல்பாய் விகற்ப மற்ற [தும் |
| அசேஷ கல்பநாதாரம் | எல்லா ஆரோபத்திற்கும் [அதிட்டானமும் |
| அசேஷ பூதாந்தர்யாமித் [வேந | எல்லாப் பூதங்களினுள்ளி [டாய் |
| வர்தமாநம் | இருக்கிறதும் |
| அந்தர் பஹிஸ்ச | உள்ளும் புறம்பும் |
| ஆகாஸ வத் | ஆகாசத்தைப் போன்று |
| அநுஸ்யூதம் | நிறைந் திருப்பதும் |
| அகண்டா நந்தஸ்வ [பாவம் | நீக்கமிலாவின்பவியல் [பினதும் |
| அப்ரமேயம் | பிரமாணத்தா லறியப்பட்ட [ததும் |
| அநுபவைக வேத்யம் | அநுபவமொன்றினாலேயே [யறியத் தக்கதும் |
| அபரோட்சதயா பாசமா [நம் | அபரோட்சமாக விளங்குவ [துமாகிய |
| ஆத்மாநம் | ஆன்மாவை |
| கரதலா மலகவத் | உள்ளங்கை நெல்லிக் கனி [போன்று |

சாட்சா தபரோட்சீக்ருத்ய நேராயுணர்ந்து

| | |
|---|---|
| க்ருதார்த்ததயா | செய் பயனடைந்த [தன்மையால் |
| காமராகாதி | காமம் இச்சை முதலிய |
| தோஷரஹித: | தோஷமின்றியவனும் |
| சமதமாதி சம்பந்ந: | சமதம முதலியவைகளை [யுடையவனும் |
| பாவமாத்ஸர்ய | பொருமை எண்ணம் |
| த்ருஷ்ணாசா | மூவேடணை இச்சை |
| மோஹாதிரஹித: | மோக முதலியன அற்றவ [னும் |
| தம்பாஹங்காராதிபி: | இடம்பம் ஆணவ முதலிய [வைகளுடன் |
| அசம்ப்ருஷ்டசேதா: | கூடாத மனமுடைய [வனும் |
| வர்த்ததே | இருக்கின்ற |
| ஏவமுக்தலட்சணோ ய: | இவ்விதங் கூறிய இலட் [சணமுடையவன் எவனோ |
| ஸ ஏவ | அவனே |
| ப்ராஹ்மண இதி | பிராமணன் என்று |
| ஸ்ருதி ஸ்ம்ருதி | சுருதி மிருதி |
| புராணேதிஹாசாநாம் | புராண இதிகாசங்களின் |
| அபிப்ராய: | கருத்து |
| அந்யதாஹி | வேறு வகையாலே |
| ப்ராஹ்மணத்வ சித்தி: | பிராமணத் தன்மை பெறப் [படுமென்பதே |
| நாஸ்த்யேவ. | இல்லை. |

## பொழிப்புரை

மேற்கூறியவைகள் பிராமணத்தன்மையன்ரு மெனின்? மற்று; பிராமணன் என்பவன்யாவன் எனில்? அத்துவிதமும், சாதி குணக்கிரியையற்றதும்; இன்ப துன்ப முதலிய ஆறுஅலை களற்றதும்; பிறப்பு முதலிய ஆறு விகாரங்களின்றியதும்; விடயமாந்தன்மை முதலிய தோஷங்கள் அற்றதும்; சத்து, சித்து, ஆனந்தம், அனந்தவடிவும்; உண்மையாய் விகற்ப மற்றதும்; கற்பனையனைத்திற்கும் ஆதாரமும்; எல்லாப் பூதங்களில் உள்ளீடாய் இருக்கின்றதும்; உள்ளும் புறம்பும் ஆகாசத்தைப் போன்று நிறைந் திருப்பதும்; நீக்கமிலா இன்ப இயல்பினதும்; பிரமாணத்தால் உணரப்படாததும்; அநுபவத்தினு லேயே அறிதற்குரியதும்; அபரோட்சமாய் விளங்கு வதுமாகிய ஆன்மாவை, நேரே உள்ளங்கை நெல்லிக் கனி போலுணர்ந்து செய்தவற்றின் பயன் வந்தமை யால் காம முதலிய தோடமற்று, சமதம முதலிய பெற்று, வேட்கை, பற்று முதலிய வொழிந்து, டம்பம் ஆணவமென்பது முதலிய சேராத மனமுடைமை என்னும் இவ்விலக்கணத்தை யுடையவன் எவனே, அவனே பிராமணன் என்பது வேதாகமபுராண இதிகாச முதலிய எல்லா நூல்களின் கருத்து. வேறுவகையால் பிராமணத் தன்மை சித்திக்கவே மாட்டாது. (10)

வாக்கிய
எண்.

11. சச்சிதானந்தமாத்மாநம் அத்விதீயம் ப்ரஹ்ம பாவயேத் ஆத்மாநம் சச்சிதானந்தம் ப்ரஹ்ம பாவயேத் இத்யுபநிஷத்.

பதவுரை

| | |
|---|---|
| சச்சிதானந்தம் | சச்சிதானந்தமாகிய |
| ஆத்மானம் | ஆன்மாவை |
| அத்விதீயம் | அத்துவிதமாகிய |
| ப்ரஹ்ம பாவயேத் | பிரமமாய்ப் பாவிக்கவும் |
| ஆத்மாநம் | ஆன்மாவை |
| சச்சிதானந்தம் | சச்சிதானந்தமாகிய |
| ப்ரஹ்மபாவயேத் | பிரமமாய்ப் பாவிக்கவும் |
| இத் யுபநிஷத். | உபநிடதம் முற்றும். |

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

பொழிப்புரை

உண்மையறிவானந்த வடிவ ஆன்மாவை அத்துவிதப் பிரமமாகப் பாவித்தல் வேண்டும்; ஆன்மாவை சச்சிதானந்த பிரமமாகப் பாவித்தல் வேண்டும். (11)

இவ்வாறு வச்சிர சூசிகை உபநிடதம் முற்றும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:



கொப்பம்பட்டி ஸ்ரீலஸ்ரீ மஹா கோவிந்த சுவாமிகளின் 03.08.2015 –ஆம் ஆண்டு குருபூஜ விழாவின் நிகழ்வு